Registered No. M. 2330 'SIDDHANTHAM'
Vol. 32—No. 9



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 32 | விகாரி புரட்டாசி 1959 செப்டம்பர் | இதழ் 9

உள்ளுறை பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.
உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

## மதிப்புரை

சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி மலர் : நமது சமாஜப் பெரியார் திரு. "கோவை கிழார்" (C. M. R) அவர்களின் பெருமுயற்சியினுல் தக்கவர்கள் பலரின் உதவிகளோடு, 1953-ல் தொடங்கப்பெற்று வளர்ந்துவரும் திருப்பேரூர்த் தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரியின் ஐந்தாண்டு நிறைவு மலராக வெளிவந்துள்ள இம் மலரின்கண், அக் கல்லூரி வளர்ச்சிபற்றிய பலவகை விவரங்களும், கல்லூரிப் பேராசிரியர்களும் மாணவர்கள் பலரும் எழுதியுள்ள அரிய இனிய கட்டுரைகள் கவிதைகள் முதலியனவும் நிறைந்து அழகொளி வீசி நறுமணம் பரப்புகின்றன. பெருமக்கள் பற்பலரின் ஆசிமொழிகளும் அழகிய படங்களும் இம்மலரின் மாட்சிமையை மிகுதிப்படுத்துகின்றன. "பேரூர்ப் பெம்மான்" (கோவை கிழார்) "கல்விக் கடல்" (திரு. கு. நடேச கவுண்டர்) "கொங்கு நாட்டுக் குறிப்புக்கள்" (பண்டித. திரு. அ. கந்தசாமி பிள்ளை) முதலிய அரிய கட்டுரைகள் இம்மலர்க்குத் தனிச் சிறப்பை யளிக்கின்றன. மாணவர்களின் கவிதைகளும் கட்டுரைகளும் செந்தமிழ்ச் சிவ நலங்கள் செறிந்து சிறந்த முறையில் அமைந்து, அவர்கள் சாந்தலிங்கர் கல்லூரியிற் பெற்ற பயிற்சியும் பண்பாடும் இனைய எனத் தெளியக் காட்டி மகிழ்விக்கின்றன. ஏனைய தமிழ்க்கல்லூரிகளின் சார்பிலும் இத்தகைய நறுமலர்கள் வெளிவருதல் பெருநலம் பயக்கும்.

—முருகவேள்

## செய்திச் சுருக்கங்கள்

சுந்தரமூர்த்தி தேவார பாராயண வேள்வி : திருத்துறையூர்த் திருநாவுக்கரசு நாயனர் சைவசித்தாந்தக் கழகச் சார்பில் 1–8–58 முதற் 10–8–59 வரை திரு. ரா. சண்முகசுந்தரம் செட்டியார் அவர்கள் தலைமையிற் சிறப்புற நடைபெற்றது. இதனைத் திரு. கு. ஆறுமுக நாயனர் அவர்கள் நன்கினிது முன்னின்று நடத்திவைத்தார்கள்.

சுந்தரர் திருநாள் : சமாஜச் சார்பில் திருமயிலைக் கபாலீச்சரத்தில் 10–8–59 அன்று, திரு. சுவாமி பரமாநந்தர் அவர்கள் தலைமையிற் கொண்டாடப் பெற்றது. திரு. வித்வான், பாலூர்-கண்ணப்ப முதலியார் B. O. L., திரு. ஜி. கலியாணம் பிள்ளை M. A. ஆகிய இரு பேரறிஞர்களும் சொற்பொழிவாற்றிச் சிறப்பித்தனர்.

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வானியையுள் நாடு

மலர் 32 | விகாரி புரட்டாசி 1959 செப்டம்பர் | இதழ் 9

## அளவை இயல்

(முருகவேள்)

### தோல்வி நிலைகள் 22

தோல்வி நிலையாவது ஏதேனும் ஒரு பொருண் முடிபு காண்பது குறித்து நிகழும் வழக்கீட்டின்கண் கலந்து கொள்ளும் இருவருள் ஒருவர் தோல்வியுறுதற்குரிய ஏது. இதனைத் 'தோல்வித்தானம்' அல்லது 'நிக்கிரகத்தானம்' என்பர். "வசன நிர்வாகர் என்ற பேரும் பூராயமாக ஒன்று பேசுமிடம் ஒன்றைப் புலம்புவார்" எனத் தாயுமான அடிகள் பாடுதல் போல, தருக்க வாதத்தின்கண் பேசத் தெரியாமையால் நிகழும் குற்றங்களே தோல்வி நிலைகள் எனப்படும். வழக்கீடு நிகழும் பொருளைப் பற்றிய அறிவுக்குறைவினலாதல், அன்றி அதனைப்பற்றிய பிறழ்வுணர்ச்சியினலாதல், ஒருவற்குத் தோல்வி நிலை ஏற்படும். "தோல்வித்தானம் இரண்டு, இருபத்திரண்டாம்" என்பது சிவஞான சித்தியார். இதன்பொருள், 'தோல்வி நிலைகள் அறியாமை (அப்பிரதிபத்தி) பிறழ அறிதல் (விப்பிரதிபத்தி) என இருவகைப் பட்டு, விரியான் இருபத்திரண்டாகும்' என்பதாம். ஆசிரியர் சிவஞான முனிவரர் 'அப்பிரதிபத்தி' 'விப்பிரதிபத்தி' என்பனவற்றை முறையே 'மயங்கப் பேசுதல்' 'வாளாவிருத்தல்' எனக் குறிப்பிடுவர். அப்பிரதிபத்தியின் வகை பதின்மூன்றும் (13), விப்பிரதிபத்தியின் வகை ஒன்பதும் (9) ஆகத் தோல்வி நிலைகளின் தொகை இருபத்திரண்டு (22)

எனக் கணக்கிடப்பெறும். ஒரு சிலர் பதினொன்கு என்றும் எட்டு என்றும் கொள்ளுவதுண்டு.

இவற்றிற்குரிய விளக்கங்கள் சிவஞான சுவாமிகள், இயற்றிய சித்தியார் உரையிலோ, தருக்க சங்கிரக தீபிகை யிலோ, அன்றித் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய தருக்க பரிபாடை மொழிபெயர்ப்பிலோ, சிறிதும் காணப்படவில்லை. நிரம்ப வழகிய தேசிகர், மறைஞான சம்பந்த தேசிகர் என்னும் இருவரும் எழுதிய சித்தியார் உரைகளி லும், சிவநெறிப் பிரகாசம் என்னும் நூலுரையிலும் ஓரளவு விரிவான விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. எனினும், அவை தாமும் " ஆர்த்த கடல் தண்ணீர் அருந்தினர்க்குத் தாகம் தணிந்திடுமோ ?" என்றபடி, நம்மனோரின் அறிவுவேட்கை யைத் தணிக்கத் தக்க அளவினவாக அமையவில்லை. ஆத லின், ஓரளவு இயன்றவரையில் அவற்றிற்குரிய சில விளக் கங்களை ஈண்டுக் காண நாம் முயலுவோமாக !

1. மேற்கோள்* அழிவு : இதனைப் " பிரதிந்நா ஹானி " என்பர். பிரதிஞ்ஞை - மேற்கோள். ஹானி - அழிவு. அஃதாவது, தான் எடுத்துக்கொண்ட மேற்கோளை நிறுவ மாட்டாமல் அதற்கு அழிவுவரப் பேசுதல். " ஒலி நிலைபே றிலது, பொறியால் உணரப்படுதலின், குடம்போல " என ஒருவன் கூறியவழி, " பொறியால் உணரப்படும் குடத் தன்மை நிலைபேறுடையதாகக் காணப்படுதலின், பொறி

---

*மேற்கோள் - கொள்கை ; 'நிறுவுதற்காக மேற்கொள்ளப்பட் டது' என்பது பொருள். இக்காளில் 'மேற்கோள்' என்னும் சொல்லை,

" முன்னோர் மொழிபொருளே யன்றி அவர்மொழியும்
பொன்னேபோற் போற்றுவம் என்பதற்கும்—முன்னோரின்
வேறுநூல் செய்துமெனும் மேற்கோள்இல் என்பதற்கும்
கூறுபழஞ் சூத்திரத்தின் கோள் "

என நன்னூலார் விதித்ததுபோல 'ஆசிரிய வசனம்' அல்லது 'Quotation' என்னும் பொருளிற் பெரும்பாலும் வழங்கி வருகின் றோம். 'மேற்கோள்' என்பது 'எடுத்தமொழி' எனவும் வழங் கப்பெறும். திருஞான சம்பந்தப் பெருமான் " ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா " என அருளிச் செய்திருத்தல் காண்க.

யால் உணரப்பெறும் ஒலியும் நிலைபேறுடையதே யாதல் வேண்டும் " என மாற்றான் எதிர்ப்புரை கிளப்பின், அதனை மறுக்க அறியாமல், முன்னர்த் தான் கூறியதனை நெகிழ விடுத்து, அஃது அழியும்படி 'ஒலி நிலைபேறுடையதே' என உடன்பட்டு நிற்றல்.

" காணப்படாமையால், உயிர் என்பதொரு பொருள் இல்லை " எனக் கூறும் சார்வாகன்,

காணொ ணுகா ரணங்க ளுந்துயிர்
கண்டி டாமையின் இன்று எனில்,
காணுமோகடம்? கண்ட கண்ணினைக்
கண்டு நிற்பதும் கண்ணதே!
காணொ ணுதுயிர் தானும் இப்படிக்
கண்டி டும்கா ரணங்களைக்
காணொ ணுகா ரணங்க ளுக்குஉயிர்
உண்மை யாவது கண்டிடே!

என மாற்றான் எதிர்ப்புரை கிளந்தவழி, அதற்கு மாறு கூற மாட்டாமல் விழித்து, உயிர் என்பதொரு பொருள் உண்டு என உடன்பட்டு நிற்பின், அது 'மேற்கோள் அழிவு' என்னும் தோல்விநிலை ஆகும்.

2. வேறு மேற்கோள் : இதனைப் " பிரதிஞ்ஞாந்தரம் " என்பர். பிரதிஞ்ஞா + அந்தரம். பிரதிஞ்ஞா - மேற்கோள். அந்தரம் - வேறு. அஃதாவது, தான் நிறுவ எடுத்துக் கொண்ட கொள்கையை விடுத்துப் பிறிதொரு மேற்கோளைக் கூறுதல். " ஒலி நிலைபேறிலது, பொறிகளால் உணரப்படுதலின், குடம்போல " என ஒருவன் கூறியவழி, " ஒலி நிலைபேறுடையது, பொறிகளால் உணரப்படுதலின், குடத்தன்மைபோல " என மாற்றான் எதிர்ப்புரை கிளப்பின், " குடமும் குடத்தன்மையும் பொறிகளால் உணரப் படுவனவேயாயினும், குடத்தன்மை குடங்களினெல்லாம் பரவிநிற்கும் பான்மையது, குடம் அத்தகையதன்று ; ஆதலின், குடத்தை உவமையாகக் கொண்ட ஒலியும் யாண்டும் பரவி நிற்பதன்று " எனக் கூறுதல். முதலில் 'ஒலி நிலைபேறிலது' என்பதனை நிறுவ முற்பட்டுப் பின்னர் 'ஒலி யாண்டும் பரவி நிற்பதன்று' எனப் பிறிதொரு மேற்கோளை நிறுவத் தொடங்குதலின் இது 'வேறு மேற்கோள்' ஆயிற்று.

" முந்நூர்வெம் பணிக்கொடியோன் மூதூரில்
நடந்துழவர் முன்றில் தோறும்
கந்தூரும் புனல்நாட்டின் நிறம்வேண்டு.
நாடொன்றும் நல்கான் ஆகில்
ஐந்தூர்வேண்டு. அவை இல்எனில் ஐந்திலம்வேண்டு.
அவைமறுத்தால் அடுபோர் வேண்டு.
சிந்தூரத் திலகநுதற் சிந்துரத்தின்
மருப்பொசித்த செங்கண் மாலே !"

எனவரும் வில்லிபுத்தூரார் பாரதச்செய்யுள் ஓராற்றான். ஈண்டு எண்ணி இன்புறத் தக்கது.

3. மேற்கோள் மாறுபாடு : இதனைப் "பிரதிந்ஞா விரோதம்" என்பர். தான் நிறுவ முயலும் மேற்கோளும் அதற்குக் கூறும் காரணமும் ஒன்றனோடொன்று மாறுபடுதல். "பொருளானது பண்பினின்றும் வேறுபட்டது, அதற்கு வேறாகாமையின், உருவத்தைப்போல" என்புழி 'வேறுபட்டது' என்னும் மேற்கோளும் 'வேறாகாமையின்' என்னும் ஏதுவும் தம்முள் இயையாமல் மாறுபட்டு நிற்கின்றன. இதனை "மேற்கோள் மலைவு" எனவும் கூறுவர். "இசை நிறை என்பது மறுத்துப் பொருள் கூறுகின்றார் பின்னும் இசைநிறை என்றல் மேற்கோள் மலைவு" எனவரும் சேனாவரையர் (தொல். சொல். 1) உரைப்பகுதி இங்கு நினைவு கூர்தற்குரியது.

4. மேற்கோள் விடுதல்: இதனைப் "பிரதிந்ஞா சந்நியாசம்" என்பர். சந்நியாசம் - விடுதல், முற்றத் துறத்தல். தான் நிறுவ எடுத்துக்கொண்ட கொள்கையினை மாற்றான் மறுத்துரைத்த வழி விடுத்தொழித்தல். "ஒலி நிலைபேறிலது, பொறியா லுணரப்படுதலின், குடம்போல" என ஒருவன் கூறியவழி, மாற்றான் "குடத்தன்மை பொறியாலுணரப் படுமாயினும் நிலைபேறுடைமை காண்டுமாகலின், ஒலி நிலைபேறுடையதே யாகல்வேண்டும்" என எதிர்ப்புரை புகலின், அதனை மறுத்துரைக்க மாட்டாமல் 'ஒலி நிலைபேறிலது' எனத் தான் முன்னர் கூறியதனைத் தானே பின்னர்க் கூற வில்லை என மறுதலித்து விடுதல்.

இனி, மணிமேகலையின்கண் "உடம்புவிட்டு ஓடும் உயிர், உருக்கொண்டு ஓர் இடம் புகும் என்றே எமக்கு ஈங்கு

உரைத்தாய் ! அவ்வுயிர் எவ்வணம் போய்ப் புகும் ?" என வினவிய நாவர்தருமகன்,

"உற்றதை யுணரும் உடலுயிர் வாழ்வுழி.
மற்றைய உடம்பே மன்னுயிர் நீங்கிடில்
தடிந்தெரி யூட்டினும் தான்உண ராதெனின்,
உடம்பிடைப் போனதொன் றுண்டென உணர்நீ !
போனர் தமக்கோர் புக்கில்உண் டென்பது
யானே அல்லேன் யாவரும் உணர்குவர் !
உடம்பீண் டொழிய உயிர்பல காவதம்
கடந்துசேண் சேறல் கனவினும் காண்குவை !
ஆங்கனம் போகி அவ்வுயிர் செய்வினை
பூண்ட யாக்கையிற் புகுவது தெளிநீ !"

எனச் சாதுவன் கூறிய சால்புரை கேட்டுத் திருந்தித் தனது முன்னைய தவறுன கொள்கைகளைக் கைவிட்டாற்போல்வனவும், 'பிரதிஞ்ஞா சந்நியாசம்' என்னும் தோல்விநிலைக்கு இனிய எடுத்துக்காட்டாம்.

5. வேற்றேது : இதனை "ஹேதுவந்தரம்" என்பர். இஃது "ஹேதுவபரம்" எனவும் கூறப்படுதல் உண்டு. அந்தரம் - வேறு. தான் கூறிய ஏதுவுக்குக் குற்றம் வந்துழி வேறோராற்றான் ஏதுக் கூறுதல். "ஒலி நிலைபேறிலது, பொறியாலுணரப்படுதலின்" என ஒருவன் கூறியவழி, மாற்றான் "பொறியாலுணரப்படுதல் ஒன்றே பற்றி ஒலியினை நிலைபேறிலது என்றல் அமையாது" என எதிர்ப்புரை கிளப்பின், "முயற்சியிற் பிறத்தலின்" என வேறோர் ஏதுவினை இடைமடுத்துக் கூற முற்படுதல்.

இவ்வாறன்றி, இயல்பாக யாவரும் இனிதறிந்துள்ள ஏதுவினை ஏதேனும் ஒரு காரணம் பற்றி மறைத்துவிட்டு, வேறோர் ஏதுவினைக் கற்பித்துக் கூறலும் 'வேற்றேது' என்னும் தோல்விநிலையாகக் கொள்ளப்படும்.

" அறுகாற் பறவை அளவில மொய்த்தலின்
கண்கோ ளாக நோக்கிப் 'பண்டும்
இனையையோ ?' என வினவினள் யாயே !
அதன்எதிர் சொல்லாள் ஆகி, அல்லாந்து
என்முகம் நோக்கி யோளே : அன்னாய் !
'யாங்குஉணர்ந் துய்குவள் கொல்?'என, மடுத்த

சார்த ரெறிமிழி காட்டி,
'ஈங்கு ஆயினவால்' என்றிசின் யானே !"

எனவரும் நற்றிணைப் பாடற்கண் (55), தலைவியின் உடல் மேல் வண்டுகள் மொய்த்தமைக்கு அவள் தலைவனை முயங்கிப் பெற்ற புதுமணம் ஏதுவாதலை, நற்றாய் ஓராற்றான் ஐயுற்று அறிந்து கொண்டனளாகவும், அதனை மறைத்து விட்டுச் சந்தன விறகின் கொள்ளியை எடுத்துக் காட்டி, அதன்கண் முன்பு தங்கியிருந்த வண்டுகளே இதுபோது தலைவியின் உடல்மேற் படர்வனவாயின என, வேறோர் ஏதுவினைத் தோழி தனது கூரிய நுண்ணுணர்வினாற் கற்பித்துக் கூறியவாறு காண்க !

இனி, முதற்கண் விதித்த நிபந்தனையின் குறைபாடு கண்டு, பின்னர் வேறு நிபந்தனையைச் சேர்த்து விதிக்கப் புகுதல் போல்வனவும், வேற்றேதுவின் இனமாய குற்றம் எனப்படும். பெரிய புராணத்துள் திருக் குறிப்புத் தொண்டர் வரலாற்றில்,

"இக்கந்தை அழுக்கேறி எடுக்கவொணா தெனினும்,யான்
மெய்க்கொண்ட குளிர்க்குடைந்து விடமாட்டேன். மேற்கடற்பால்
அக்குன்றம் வெங்கதிரோன் அணைவதன்முன் தருவீரேல்,
கைக்கொண்டு போய்ஒலித்துக் கொடுவாரும் கடிதென்றார் !"

" தந்தருளும் இக்கந்தை தாழாதே ஒலித்துமக்கின்று
அந்திபடு வதன்முன்னம் தருகின்றேன்! என,அவரும்
கந்தைஇது ஒலித்துஉணக்கிக் கடிதின்றே தாரீரேல்,
இந்தஉடற் கிடர்செய்தீர்! என்றுகொடுத் தேகினார் !"

எனப்போதரும் திருப்பாடல்களில், இறைவன் திருக்குறிப்புத் தொண்டர்பால் 'ஞாயிறு மறையுமுன் தருக' என முதற்கண் விதித்து, 'உணக்கித் தருக' எனப் பின்னர் வேறொரு நிபந்தனையையும் சேர்த்து விதித்தாற் போல்வன, ஈண்டுக் கருதற்பாலன.

6. வேற்றுப் பொருள் : இதனை "அர்த்தாந்தரம்" என்பர். அர்த்த+அந்தரம். அர்த்தம் - பொருள். அந்தரம் - வேறு. அஃதாவது, தனது கொள்கையினை நிறுவ முடியாமையால் நேரும் தோல்வியினை மறைத்தற் பொருட்டு, எடுத்துக்கொண்ட கொள்கைக்குச் சிறிதும் இயைபில்லாத

(Irrelevant) செய்திகளைக் குறித்துப் பேசுதல். "ஒலி நிலை பேறிலது, பொறியால் உணரப்படுதலின்" என்பதனை நிறுவ முற்பட்டு, மாற்ருன் அதனை மறுத்துரைப்பின், "ஒலியானது விசும்பின் பண்பு, விசும்பு ஏனைய எல்லாப் பொருட்கும் இடங்கொடுத்து நிற்கும், அது நுண்ணியல்பிற்று" என வழக்கிட்டுக்குரிய பொருளோடு சிறிதும் இயைபில்லாத வேறு பிற செய்திகளைப் பேசத் தலைப்படுதல். ஒலி பற்றிய வழக்கிட்டின்கண் அதனின் வேறு பொருளாய விசும்பு பற்றிப் பேசப் புகுதல் குற்றம் எனப்பட்டுத் தோல்வி நிலையாம்.

தலைமகன் பேய்கண்டாற்போல நின்ருன் எனத் தோழி கூறக்கேட்ட தலைமகள், தான் பெருநாணினளாத லின் அதனை அறியாதாள்போல நடித்து, வெளிப்படையாக மறுமொழி கொடாது வேறு பிற பொருள்கள்மேல் வைத்து, ஓர்ந்து கூட்டினல் மறுமொழியாகும்படி தோழிக்கு உரைத்தலாக வரூஉம்,

" சங்கம் தரும்முத்தி யாம்பெற வான்கழி தான்கெழுமிப்
பொங்கும் புனற்கங்கை தாங்கிப் பொலிகலிப் பாறுலவு
துங்கம் மலிதலை ஏந்தலின் ஏந்திழை தொல்லைப்பன்மா
வங்கம் மலிகலி நீர்தில்லை வானவன் நேர்வருமே !"

" புரங்கடந் தான்அடி காண்பான் புவிவிண்டு புக்கறியா(து)
இரங்கிடெந் தாய்என் றிரப்பத்தன் ஈரடிக் கென்னிரண்டு
கரங்கள்தந் தான்ஒன்று காட்டமற் றுங்கதும் காட்டிடென்று
வரங்கிடந் தான்தில்லை அம்பல முன்றில்அம் மாயவனே !"

என்னும் திருச்சிற்றம்பலக்கோவையார் செய்யுட்கள், " வேற்றுப் பொருள் " என்னும் இயைபுபற்றி ஓராற்ருன் இயைத் துணர்ந்து இன்புறற்பாலன. இலக்கியச் சுவை பெரிதும் சிறந்த இப்பாடல்களின் நுண்பொருள்கள் கற்பார்க்குக் கழிபேருவகை பயப்பனவாம்.

இனி, முன்னர் நிகழ்த்திய கூற்று ஒன்றன் பொருளை, அது தனக்கு நலம் பயவாது எனக் கண்டு, பின்னர் வேற்ற பெற்றி மாற்றிக் கூற முற்படுதலும் 'அர்த்தாந்தரம்' என்னும் தோல்விநிலையாம்.

"கோதக்க செய்யும் சிறுபட்டி, மேலோர்நாள்
அன்னையும் யானும் இருந்தேமா, 'இல்லிரே !
உண்ணுநீர் வேட்டேன்' எனவந்தாற்கு, அன்னை
'அடர்பொற் சிரகத்தால் வாக்கிச் சுடரிழாய்
உண்ணுநீர் ஊட்டிவா! என்றாள். என, யானும்
தன்னை அறியாது சென்றேன். மற்றென்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்டு,
'அன்னாய்! இவனொருவன் செய்தது காண் !' என்றேனா,
அன்னை அலறிப் படர்தர, த் தன்னையான்
'உண்ணுநீர் விக்கினான் !' என்றேன்"

எனக் கபிலர் பாடிய குறிஞ்சிக் கலிப்பாடல் (15) ஈண்டு எண்ணி இன்புறற்பாலது. இதன்கண் 'அன்னாய் இவன் ஒருவன் செய்தது காண்' எனத் தான் கூவியதன் பொருட் குறிப்பை, அது தனக்கு நலம் பயவாது எனக் கண்டு, தலைவி அதனைப் பின்னர் 'இவன் உண்ணும் நீர் விக்கினான்' என ஏற்ற பெற்றி மாற்றி யுரைத்தமை கண்டுகொள்க !

7. பொருளின்மை : இதனை "நிரர்த்தகம்" என்பர். நிர் - இன்மை. அர்த்தகம் - பொருளுடையது. அஃதாவது ஒன்றனையும் உணர்த்தாத சொற்களைக் கூறிக்கொண்டு செல்லுதல். "குடம் என்றும் அழியா இயல்பிற்று, றகர பகர தகர டகர சகர ககரம் ஆகலின்" என்புழி, றகர பகர தகர டகர சகர ககரம் என்பன போல, ஒன்றனையும் உணர்த்தாத பொருளற்ற பயனில் சொற்களை அடுக்கிக் கொண்டு போதல், வழக்கீட்டின்கண் குற்றமாகக் கொள்ளப்பட்டுத் தோல்வி நிலையாம். "கடம் அநித்தியம், அகார ககார யகார ரேபாத்மகமாய் இருக்கின்ற சப்தமானது அகார்ய ரூபமாய் இருக்கும்" என்பது, இதற்கு வடமொழி உதாரணம். பிற்போதரும் செய்யுளும் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும் எனலாம்.

"மலடி மைந்தனும் தானுவிற் புருடனும் வான்மலர் முடிசூடி
இலகு கந்தர்ப்ப நகரிலே சுத்திகை இரதம் பேசிக்
கலக மாய்முயற் கொம்பினாற் குத்தியே களைத்திரு வரும்மாண்டார்
அலகை ஆயினர் எனும்விவ காரத்தை அறிந்தவன் மயங்கானே"

—கைவல்யநவநீதம்

8. பொருள் அறியப்படாமை : இஃது " அவிஞ்ஞாதார்த்தம் " எனப்படும். அவிஞ்ஞாத+அர்த்தம். அவிஞ்ஞாத - அறியப்படாத. அர்த்தம் - பொருள். மூன்றுமுறை மீண்டும் மீண்டும் திருப்பிக் கூறப்பெற்ற வழியும் அவையினராலும் மாற்றாளுலும் பொருளுணர்ந்து கொள்ள முடியாமல் ஐயத்தினை விளைத்து நிற்கும் சொற்களைக் கூறுதல். அஃதாவது, 'ஸ்வேதோ யாவதி' என்னும் சொற்றொடரானது வெள்ளைநாய் வழியே போகின்றது என்றும், வெள்ளைக் குதிரை போகின்றது என்றும், ஸ்வேதன் என்னும் பெயருடைய மனிதன் போகின்றான் என்றும் பல திறப் பொருளுணர்த்துதலால், உரிய பொருள் இதுவே என்று துணிய முடியாமல் ஐயத்தினை விளைத்து நிற்றல் போல்வது. தமிழிற் 'புலிகொன்ற யானை' என்றால், புலி யானையைக் கொன்றதா, அன்றி யானைதான் புலியைக் கொன்றதா எனத் துணிய முடியாமல் ஐயம் விளைத்தலும் உணரத்தகும். மாணிக்கவாசகப் பெருமான் திருச்சிற்றம்பலக் கோவையாரின்கண் தலைமகளை நடுங்க நாடலுறும் தோழியானவள் " கொடிய வாயைப் புலி அங்காந்தது - உழுவையினது தீவாயை வேறொன்று கிழித்தது - உழுவையினது தீயவாய் பிறிதொன்றனைக் கிழித்தது " என முத்திறப் பொருள் அமைந்து, தலைவிக்கு ஐயமும் மயக்கமும் விளையும் வண்ணம் கூறியதாகப் பாடியுள்ள,

" ஆவா இருவர் அறியா அடிதில்லை அம்பலத்து
மூவா யிரவர் வணங்கநின் றோனையுன் னாரின்முன்னித்
தீவாய் உழுவை கிழிந்ததந் தோசிறி தேபிழைப்பித்(து)
ஆவா மணிவேல் பணிகொண்ட வாறின்றோர் ஆண்டகையே "

என்னும் இனிய செய்யுள் போல்வன ஈண்டைக்கு இயையுடைய சிறந்த எடுத்துக் காட்டாகும்.

9. பொருட்போலி : இஃது 'அபார்த்தகம்' எனப்படும். அப - நீங்கிய. அர்த்தகம் - பொருளுடையது. சொற்கள் தொடருங்கால் பயனிலை வகையானும், தொகைநிலை வகையானும், எண்ணுநிலை வகையானும், தொடர்தல் வேண்டும் என்பது தமிழ்நூல் முறை. அவாய்நிலை (ஆகாங்க்ஷை) தகுதி (யோக்கியதை) அண்மை (சந்நிதி) என்பனவற்றால் தொடர்தல் வேண்டும் என்பது வடநூன் முறை. இவ்வாறன்றிச்

சொற்றொடரியல்பு (Syntactical order) அமையாமல் " தடம் படம் அணி நுணி ஒலி எலி - சாத்தன் நல்லன் - மருநி வந்தாள் - கன்று பின்று மன்று தென்று சோழங்கப் பெருமானே " என்றாற்போலச் சொற்களை இயைபின்றிக் (Incoherent) கூறிக்கொண்டு செல்லுதல்.

**10.** காலம் பெறுமை : இதனை " அப்பிராப்த காலம் " என்பர். அப்பிராப்தம்-அடையப்படாமை, பெறுமை. அஃதாவது, மேற்கோள் (பிரதிஞ்ஞை) ஏது (ஹேது) எடுத்துக் காட்டு (திருஷ்டாந்தம்) பொருத்துதல் (உபநயம்) முடித்தல் (நிகமனம்) என்னும் ஐவகை யுறுப்புக்களையும் (Syllogism) முறைதவறி முன்பின்னாகக் கூறுதல்.

இம்மலை நெருப்புடைத்து—மேற்கோள் 1
எதுவெது புகையுடையதோ
அதுவது நெருப்புடையது,
அடுக்களைபோல—எடுத்துக்காட்டு 3
புகையுடைமையால்—ஏது 2
இம்மலை நெருப்புடைத்து—முடித்தல் 5
இம்மலை புகை யுடையது—பொருத்துதல் 4

**11.** குன்றக் கூறல் : இது " நியூனம் " எனப்படும். ந்யூனம்-குறைவு. மேற்கோள் ஏது எடுத்துக்காட்டு பொருத்துதல் முடித்தல் என்னும் ஐவகை யுறுப்புகளுள் ஒரு சில குறையக்கூறுதல்.

" இம்மலை தீயுடைத்து, புகையுடைமையால் "

என மட்டும் கூறி, அடுக்களையாகிய சபக்கத்தினையும், நீர் நிலையாகிய விபக்கத்தினையும், இம்மலைபுகையுடைத்து என்னும் உபநயத்தினையும், ஆதலின் இம்மலை தீயுடையது என்னும் நிகமனத்தினையும் கூறாது விடுதல். சுருக்கத்தின் பொருட்டு ஒரோவழி இங்ஙனம் கூறுதலில் இழுக்கில்லையாயினும், ஐவகை யுறுப்புக்களும் அமையக் கூறுதலே தருக்கநெறி முறையாம் என்பது கருத்து.

**12.** மிகைபடக் கூறல் : இதனை " அதிகம் " என்பர். தான் நிறுவ முயலும் கொள்கைக்கு வறிதே ஒன்றின் மேற்பட்ட ஏதுக்களோ எடுத்துக்காட்டுக்களோ கூறுதல்.

இம்மலை நெருப்புடையது—மேற்கோள்
புகையுடைமையால்—ஏது
ஒளியுடைமையால்— ,,

அடுக்களை போல — எடுத்துக்காட்டு
சூளை போல — ,,

என ஒருவன் கூறலுறின், 'ஒளியுடைமையால்' என்னும் ஏதுவும், 'சூளைபோல' என்னும் எடுத்துக்காட்டும் வறிதே வேண்டாமைக் கூறப் பெற்றதனால் 'அதிகம்' ஆயின. ஏதேனும் இயையும் பயனும் கருதி ஏதுக்களோ எடுத்துக் காட்டுக்களோ பலவாகக் கூறப்பெறின், அவை குற்றமாகா.

"பாண்டிமா தேவியார் தமது பொற்பில்
பயிலுநெடு மங்கலநாண் பாது காத்தும்,
ஆண்டகையார் குலச்சிறையார் அன்பி னாலும்,
அரசன்பால் அபராதம் உறுதலாலும்,
மீண்டுசிவ நெறியடையும் விதியி னாலும்,
வெண்ணீறு வெப்பகலப் புகலி வேந்தர்
தீண்டியிடப் பேறுடையன் ஆத லாலும்,
தீப்பிணியைப் பையவே செல்க என்றார்"

"பண்ணிசை,வெம் பரிதிமதி, திலதயிலம்,
தீஇரும்பு, பாணி உப்பு,
விண்அகிலம், உடலுயிர், நீர்நிழல், உச்சிப்
பளிங்கு,பகல் விளக்கு, பால்நீர்,
கண்இரவி, உணர்வுஒளிபோல் பிரிவரிய
அத்துவிதக் கலவி காட்டித்
தண்ணளிவைத் தெமையாண்ட துறைசைநமச்
சிவாயகுரு சரணம் போற்றி"

எனப் போதரும் பாடல்களில் சேக்கிழார் சுவாமிகளும் சிவஞானசுவாமிகளும் முறையே ஐந்து ஏதுக்களும், பதின்மூன்று எடுத்துக்காட்டுக்களும் கூறியிருத்தல் ஈண்டு அறிந்து இன்புறற்பாலது.

**13-14.** கூறியது கூறல் : இது "புநருக்தம்" எனப் படும். புநர்-பின்பு, உக்தம்-சொல்லுதல். முன்னர்க் கூறிய தொன்றனையே பின்னரும் எடுத்து வறிதே கூறின் அது கூறியது கூறல் (புநருத்தம்) என்னும் குற்றமாகும். ஆயினும் முன்னர்க் கூறியது (புரோவாதம்) ஒன்றனையே வேறொன்று விதித்தல் ஆகிய பயன்கருதிப் பின்னரும் எடுத்தோதலுறின், அது கூறியது கூறல் என்னும் குற்ற மாகாமல் வழி மொழிதல் (அநுவாதம்) என்னும் நற்ற

மாகத் தழீஇக் கொள்ளப்படும். அங்ஙனம் வழிமொழித லாகிய பயனின்றி, முன்னர்க் கூறியதனையே பின்னரும் வறிதே எடுத்துக் கூறுதலாகிய 'புநருத்தம்' என்னும் குற்ற மானது, இருதிறப்படும்.

" ஒலி நிலை பேறிலது, ஒலி நிலை பேறிலது "

என்றல், கூறிய சொல்லையே மீட்டும் கூறுதலாகிய குற்றம். இது 'சந்தப் புநருக்தம்' எனப்படும்.

" ஒலி நிலைபேறிலது,
எதிரொலி அழியுந்தன்மையது,
கேட்கப்படுவன யாவும் நிலையில்லாதன,
ஓசையெல்லாம் உடனே மறைந்துவிடும் "

என்றாற் போல்வன, கூறிய பொருளையே மீட்டும் கூறுத லாகிய குற்றம். இதனை 'அர்த்தப் புநருக்தம்' என்பர். ஐவகை யுறுப்புக்களுள் உபநயம் நிகமனம் ஆகிய இரண்டும் தெளிவுறுத்தலாகிய பயன் கருதியே, வழிமொழிதல் (அநுவாதம்) ஆக மீட்டும் கூறப் பெறுகின்றன என்பதனை ஈண்டு உணர்ந்துகொள்ளுதல் வேண்டும்.

**15.** பிற் கூற்றின்மை : இஃது "அநநுபாஷணம்" எனப் பெறும். அந்+அநு+பாஷணம். அந்-இன்மை ; அநு-பின்; பாஷணம்-மொழிதல், கூறுதல். அநுபாஷணம்-வழிமொழிதல், பிற்கூற்று. மாற்றுனல் மூன்றுமுறை கூறப்பட்டு அவையினரால் பொருளுணரப் பெற்றதொன் றனை வழிமொழியவும், அதற்கு விடைகூறவும் மாட்டாமல் வாளாதிருத்தல்.

**16.** அறியாமை : இதனை "அஜ்ஞானம்" என்பர். மாற்றுனல் மூன்றுமுறை கூறப்பட்டு, அவையினரால் நன்கி னிது உணர்ந்துகொள்ளப் பெற்றுள்ளதொரு செய்தியினைப் புரிந்துகொள்ளும் அறிவுமதுகை யின்றி வாளாதிருக்கும் தன்மை. இதன் இயல்பினைப் பின்வரும் கந்தபுராணப் பாடல்கள் நன்கினிது உணர்த்துவனவாம்.

" தாமரைத்தலை இருந்தவன் குடிலைமுன் சாற்றி
மாமறைத்தலை எடுத்தனன் பகர்தலும், வாம்பில்
காமர் பெற்றுடைக் குமரவேள் நிற்றி,முன் கழறும்
ஓமெனப்படும் மொழிப்பொருள் இயம்புகென் றுரைத்தான் "

" முகத்தில் ஒன்றதா அவ்வெழுத் துடையதோர் முருகன்
நகைத்து முன்எழுத் திறுக்குரை பொருள்என நவில
மிகைத்த கண்களை விழித்தனன், வெள்கினன், விக்கித்
திகைத்தி ருந்தனன், கண்டிலன் அப்பொருட் டிறனே !"

" நாம றைக்கெலாம் ஆதியும் அந்தமும் சொல்லும்
ஓம்எ னப்படும் ஓரெழுத் துண்மையை உணரான்
மாம லர்ப்பெருங் கடவுளும் மயங்கினுன் என்றால்
நாம்இ னிச்சில அறிந்தனம் என்பது நகையே"

(கந்தபுராணம், அயனைச் சிறைபுரி படலம்)

**17.** தடுமாற்றம்: இஃது "அப்பிரதிபை" எனப்படும். பிரதிபை - அறிவு, அப்பிரதிபை - அறிவின்மை, இடத்திற் கேற்ற அறிவு இன்மை (Non-ingenuity). மாற்றான் தன் கொள்கையைக் கூறியவழி அதனை மறுத்துரையாட முனையாமலும், வினு நிகழ்த்தியவழி அதற்கு விடைகூற முடியாமலும் நிலங்கிளைத்து நிற்றல், வான்முகடு நோக்கல் போல்வன செய்து தடுமாறுதல்.

" எவ்வாய்ச் சென்றனை அவண் ? எனக் கூறி
அன்னை ஆனுள் கழற, முன்நின்று
'அருவி ஆர்க்கும் பெருவரை நாடனை
அறியலும் அறியேன் ! காண்டலும் இலனே !
வெதிர்புனை தட்டையேன் மலர்பூக் கொய்து
சுனைபாய்ந்து ஆடிற்றும் இலன் !' என நினைவிலே
பொய்யல் அந்தோ வாய்த்தனை !"

எனவரும் நற்றிணைப் பாடல் (147) "அப்பிரதிபை" அல்லது தடுமாற்றம் என்பதனை நன்கினிது சுவைமிக விளக்குவதாகும்.

**18.** நழுவுதல் : இதனை "விக்ஷேபம்" என்பர். விக்ஷேபம்-பிறிதொன்றனைச் சொல்லிப் பொழுது போக்குதல், தொலைவில் விடுத்துக் காலங் கழித்தல் (Evasion). சொற் போரிற் கலந்துகொண்டபின் மாற்றானின் கொள்கையினை மறுக்க இயலாமையால், வினைச்செறிவு மிக்குளதென்றே னும், பின்னொருகாற் காண்டு மென்றேனும், நடுவணர் வந்திலர் என்றேனும், ஏதாவதொரு தலைக்கீடு (Pretext) காட்டித் தப்பித்துக் கொள்ள முயலுதல்.

"இல்லிறுக் கேகி மீள்வன் யான்என்றும், குளத்திற் கேகி
ஒல்லையில் வருவேன் என்றும், ஒவ்வொரு வார்த்தை யிட்டு
வல்லெழு வினைய தோளார் அனைவரும் வன்கால் தள்ளச்
செல்லெழு முகில்போற் கூட்டம் சிதைத்தனர் ஒளித்துப் போனார்"

எனவரும் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற்புராணப்பாடல் கண்டுப் பெரிதும் நினைவுகூர்ந்து மனமகிழ்தற் குரிய தாகும். தாயுமான அடிகள்,

" வடமொழியிலே
வல்லான் ஒருத்தன் வரவும் த்ராவிடத்திலே
வந்ததா விவகரிப்பேன் !
வல்லதமிழ் அறிஞர்வரின் அங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிது புகல்வேன் !"

எனப்பாடுதல் போல, மாற்றானை மருட்டித் தப்ப முயலுதல் போல்வனவும் 'விக்ஷேபம்' என்னும் தோல்விநிலையின் இன மாய் அடங்கும்.

19. பிறன்கூற்றை உடன்படல்: இது "மதாநுஞ்ஞை" எனப்படும். மதம்+அநுஞ்ஞை. மதம்-பிறன்கொள்கை, கூற்று. அநுஞ்ஞை-உடன்படுதல். மாற்றான் தன்னைச் 'சோரன்' என இகழ்ந்தவழி 'யான் சோரன் அல்லேன்' என மறுத்துக் கூறாமல், "ஆண்மகனாதலின் நீதானும் சோரத் தன்மையினை உடையை" எனத் தானும் அவனை இகழ்ந்து கூறி, அவ்வாற்றால் தனது சோரத் தன்மையை ஒருவன் அறிந்தோ அறியாமலோ உடன்பட்டுக் கொள்ளுதல்.

சீவகன் சச்சந்தன் என்னும் மன்னனின் மகனாகவும், அவ்வியல்பு அறியாது அவனைக் கந்துக்கடன் என்னும் வாணிகனின் மகனாகப் பிறழக்கொண்டு,

" வாணிகம் ஒன்றும் தேற்றாய் ! முதலொடுங் கேடு வந்தால்
ஊண்இகந் தீட்டப் பட்ட ஊதிய ஒழுக்கின் நெஞ்சத்(து)
எண்இகந் திலேசு நோக்கி இருமுதல் கெடாமை கொள்வார் !
சேண்இகந் துய்யப் போகின் செறிதொடி ஒழிய ! என்று "

பகையரசர் பலரும் பழித்துரைத்து எதிர்த்தபோது, சீவகன் "யான் வாணிகன் மகன் அல்லேன், அரசிளங்குமரன்" என மறுத்துக் கூறாது, அவர்தம் கூற்றையே உடன்பட்டு நின்று,

"தம்முடைப் பண்டர் தன்னைக் கொடுத்தவர் உடைமை கோடல்
எம்முடை யவர்கள் வாழ்க்கை! எமக்கும்அஃ தொக்கும் அன்றே
அம்முடி அரசிர்க் கெல்லாம் என்கையில் அம்பு தந்து
நம்முடைத் திருவும் தேசும் நோக்குமின் கொள்வல் !"

எனக் கூறினாற் போல்வது, பிறன்கூற்றை யுடன்படுதல் ஆகிய மதாநுஞ்ஞைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

**20.** வினவற்பாலதனை வினவாமை: இதனைப் "பர்யநுயோஜ்யோபேட்சணம்" என்பர். பர்யநுயோஜ்யம் + உபேட்சணம். பர்யநுயோஜ்யம் - வினவற்பாலது. உபேட்சணம் - விருப்பமின்மை. மறுத்து வினவத்தக்கதொரு கருத்தினை மாற்றான் கூறியவழி, அதனை மறுத்து வினவா திருத்தல். "கறுப்புநிறக் காளைமாடு சிவப்புநிறப் பால்கறந்தது" என மாற்றான் கூறியவழி, எங்கேனும் காளைமாடு பால் கறக்குமா? பால் சிவப்பு நிறமாக இருக்குமா? என வின வற்பாலதனை வினவாது விடின், அஃது ஒருவனுக்குக் குற்றமாகும்.

"அவகதையாய்ப் பயனற்ற கதைசா தாகில்,
அம்மையும்இம் மையும்உறுதி பயக்கத் தக்க
சிவகதைஎது? அதுகற்ற திறமைப் பேர்ஆர்?
சீவகசிந் தாமணிபோல் இடையில் வந்த
நவகதையோ? புராதனமோ? முன்நூல் உண்டோ?
நானிலத்துச் சொன்னவர்ஆர்? கேட்ட பேர்ஆர்?
தவகதையோ? தவம்பண்ணிப் பேறு பெற்ற
தனிக்கதையோ? அடைவுபடச் சாற்றும்! என்றான்"

என்றாற்போல், வினவற்பாலவற்றை யெல்லாம் தொகுத்தும் தொடுத்தும் வினவுதல் தருக்க நெறிக்குப் பொருத்தம் மிக்கதேயாம்.

**21.** வினவற்பாலது அல்லாததனை வினவுதல்: இது "நிரநுயோஜ்யாநுயோகம்" எனப் பெயர் பெறும். இதனை 'உடன்படற்பாலது அல்லதனை உடன்படல்' எனவும் கூறுவர். அநுயோஜ்யம் - உடன்படற்பாலது. நிர் + அநுயோஜ்யம் - உடன்படற்பாலது அல்லாதது. அநுயோகம் - உடன்படுதல். "எருது ஈன்றது" என மாற்றான் கூறியவழி, அக் கூற்றினை ஆராய்ந்து பாராமலே ஒருவன் "என்ன கன்று?" என வினவின், அது வினவற்பால தல்ல

தனை வினவுதலும், உடன்படற்பால தல்லதனை உடன்படலு மாய்க் குற்றமாம்.

"காமனும் தேவியும் போலும் ஈங்கிவர்
'ஆர்?'எனக் கேட்டீங்கு அறிகுவம் என்றே,
கோற்றுணல் யாக்கை கொசிதவத் திர்! உடன்
ஆற்றுவழிப் பட்டோர் ஆர்?என வினவ,
மக்கள் காணிர் மானிட யாக்கையர்
பக்கம் நீங்குமின் பரிபுலம் பினர்! என,
உடன்வயிற் றோர்கள் ஒருங்குடன் வாழ்க்கை
கடவதும் உண்டோ? கற்றறிக் திர் !"

எனக் கோவலனையும் கண்ணகியையும் குறித்துக் கவுந்தி யடிகளை நோக்கி, வம்பப் பரத்தையும் வறுமொழியாளனும் வினவியதாகச் சிலப்பதிகாரம் கூறும் பகுதி, 'வினவற்பால தல்லதனை வினவுதல்' ஆகிய 'நிரநுயோஜ்யாநுயோகம்' என்னும் குற்றமாகும் எனலாம்.

22. கொள்கைப் போலி: இதனை "அபசித்தாந்தம்" என்பர். அப-மாறுன, சித்தாந்தம் - கொள்கை, முடிந்த முடிபு. வழக்கிட்டின்கண் ஒருவன் தனதென்று உடன் பட்டு மேற்கொண்ட கொள்கையினின்று பிறழ்ந்து சென்று அதற்கு மறுதலைப்படப் பேசுதல். "இல்லது தோன்றாது உள்ளது அழியாது" என்னும் சாங்கியக் கொள் கையினை மேற்கொண்டு அதன்வழியே வழக்குரை நிகழ்த் தும் ஒருவன், "இல்லது தோன்றாதாயின், உலகில் மனிதச் செயல் ஒன்றும் நிகழ இடமில்லை. உள்ளது அழியாதா யின், ஒரு செயலும் உலகில் முடிவு பெறாது" என மாற் றான் மறுப்புரை கூறியவழி, "இல்லது தோன்றும் உள்ளது அழியும்" என உடன்பட்டுக் கோடல் கொள்கைப்போலி அல்லது அபசித்தாந்தம் எனப்படும்.

" அத்தன் இயற்றும் இத்தொழில், பிறர்க்கோ ?
தனக்கோ ? வீணோ ? எனக்குஈது இயம்புக !
வீண்எனில், பித்தர் மாணறு தொழில்போல்
தலைமையும் அறிவும் இலதென இகழ்வர்.
தனக்குஎனில், அஃதும் இசைப்பதொன் றன்றே !
தன்போல் அறிஞரும் தலைவரும் இலரால் !
மின்போல் நிலைமையை-வேண்டலும்பழுதே !
பிறர்க்குஎனில், பிறரும் பிறர்க்காம் பொருளும்

பொருட்கமை கருவியும் அதற்குபா தானமும்
செய்கையும் என்றோர் ஐவகைத் தானொடு
மாறுச் சைவர் கூறுர் என்றால்
நின்சித் தாந்தம் அவசித் தாந்தம் ''
(நிமித்த காரண பரிணாமவாதி நிராகரணம் 9-20)

எனவரும் சங்கற்ப நிராகரணப் பகுதியும் ஈண்டு உணரத்தகும்.

ஒரு சிலர் '' ஏதுப்போலி '' என்பதனையும் தோல்வித் தானங்களுள் ஒன்றாகக் கொண்டு அதனை இருபத்திரண்டாவதாகக் கணக்கிடுவர். ஏதுப்போலி முன்னரே ஆராயப் பட்டமையின் அதனை விடுத்து, அதற்கு மாறாகக் ' கூறியது கூறல் ' ஆகிய புநருக்தத்தினை, சொல்லை இரட்டித்துச் சொல்லுதலும், பொருளை இரட்டித்துச் சொல்லுதலும் என இரண்டாகப் பகுத்து, இருபத்திரண்டு என்னும் எண் அமையக் கணக்கிடுவர் சிவஞான முனிவரர் போன்ற சிலர். அன்னம்பட்டர் போன்ற மற்றுஞ் சிலர் தோல்வித் தானங்கள் இருபத்தொன்றே எனக்கொண்டு அமைதலும் உண்டு.

'' நன்றாய்ந்த நீள்நிமிர்சடை
முதுமுதல்வன் வாய்போகாது
ஒன்றுபுரிந்த ஈர்இரண்டின்
ஆறுணர்ந்த ஒருமுதுநூல்
இகல்கண்டோர் மிகல்சாய்மார்
மெய்அன்ன பொய்யுணர்ந்து
பொய்ஓராதுமெய்கொளீஇ
மூவேழ்துறையும் முட்டின்றுபோகிய
உரைசால் சிறப்பின் உரவோர் மருக!'' (புறம் 166)

எனவரும் புறநானூற்றுப் பாடலின்கண், '' மூவேழ் துறை என்பதற்கு இருபத்தொரு (21) கூறுபட்ட தருக்க நூல் என்றுரைப்பினும் அமையும் '' எனப் பண்டைய வுரையாசிரியர் குறித்திருக்கும் விளக்கம் ஈண்டுச் சிந்திக்கற்பாலதாகத் திகழ்கின்றது. ஒருகால், '' ஏதுப்போலி எழுமூன்றாகும் '' என முன்னர்க் கூறிய ஏதுப்போலிகள் இருபத்தொன்றனையும் இது குறிப்பதாகல் கூடும்.

இஃதெங்ஙனமாயினும், ஆசிரியர் அருணந்தி சிவனார் '' தோல்வித்தானம் இரண்டு, இருபத்திரண்டு ஆம் '' என முடித்துக் கூறுதலின் (Ipse dixit), நாம் தோல்வி நிலைகள் இருபத்திரண்டு எனக் கோடலே முறையாம்.

அங்கபாதர், தருமகீர்த்தி, வாசஸ்பதி, வசுபந்து முதலிய புகழோங்கிய தருக்கநூல் அறிஞர்களும் தோல்வி நிலைகள் இருபத்திரண்டு எனவே கொண்டுள்ளனர். எனினும், தோல்வி நிலைகள் சாலவும் மிகப்பல. அவற்றுள் மிகவும் முதன்மையானவை இவ் இருபத்திரண்டு என்பது கருத்தாகக் கொள்க!

——

# நல்வாழ்வு

திரு. வித்துவான் : மா. நடராசன், M.A., B.O.L.,

உலகில் வாழும் உயிரினங்கள் பல. அவற்றை ஓர் அறிவு உயிர் முதல் ஆறு அறிவு உயிர் ஈறாக வகைப்படுத்துக் கூறுவர் ஆன்றோர். இவ்வாறு வகை உயிரினங்களுள் முதற்கண் வைத்து எண்ணத் தகுவது ஆறு அறிவு பெற்ற மக்களினமே யாகும். ஏனெனில் ஓர் அறிவு முதல் ஐயறிவு வரை நிரம்பப் பெற்றுள்ள பறவை, விலங்கு முதலியன நன்மை தீமைகளைப் பகுத்துணரும் ஆற்றல் உடையன அல்ல. ஆனால் மக்களோ தங்களின் ஆறாவது அறிவாகிய மன அறிவின் மிகுதியால் ஏனையவற்றை விடச் சிறந்து விளங்குகின்றனர். இங்ஙனம் மன வறிவானது வளர்ச்சியுற்று ஏற்றமுறும் பொழுதுதான் மனிதன் பண்புடையவனாகிறான். பண்பட்ட உள்ளம் இல்லாதவன் மனிதனாகக் கருதப்படுவதில்லை. இதுபற்றியே,

‘மக்கள் தாமே ஆறறி வுயிரே’ (தொல். மா. 575)

என்றும்,

‘மாவும் புள்ளும் ஐயறி வினவே’ ( ,, மா. 576)

என்றும் தொல்காப்பியர் அறிவுறுத்தியுள்ளார்.

மக்கள் ஆறறிவும் நிரம்பப் பெற்றுப் பண்புடைமையைப் பெற்றிருப்பதாலேயே மாக்களினின்றும் உயர்வாக எண்ணப்படுவதுமன்றி, பண்புடைமையைப் பெறாத ஒருவன் எத்துணைச் சிறப்பினைப் பெற்றிருப்பினும் மக்களினத்தில் சேர்க்கப்படாது, மரத்திற்கு ஒப்பாகக் கருதப்படுவான் என்றும் பொய்யில் புலவன் புகன்றுள்ள

‘உறுப்பொத்தல் மக்களொப்பு அன்றால் வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு’ (குறள் - 993)

‘ அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர் ’ (குறள் - 997)

என்னும் குறட்பாக்கள் மெய்ப்பிக்கின்றன. பண்புநலம் செறிந்த மனிதனே இந்நில உலகில் மாண்புடையவனுகி ருன். அவனுலேயே இந்நில உலகம் நின்று நிலவுகிறது. இல்லையேல் இவ்வுலகம் மாய்ந்து போவது உறுதி. இவ்வுண்மையைச் சான்ருேர் பலரும் கூறியுள்ளார்கள். நமது முன்னேர்களாகிய சங்கமேறிய சான்ருேர்களும் தங்கள் பாடல்களில் இக் கருத்தினை வலியுறுத்திக் கூறியுள்ளார்கள். கடைச் சங்க காலத்தில் வாழ்ந்த பாண்டிய மன்னர்களில் ஒருவன் கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி. அவன் பாடியுள்ள......

‘ உண்டால் அம்ம இவ்உலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவது ஆயினும், ‘இனிது’ எனத்
தமியர் உண்டலும் இலரே ; முனிவு இலர் ;
துஞ்சலும் இலர் ; பிறர் அஞ்சுவது அஞ்சி,
புகழ்எனின், உயிரும் கொடுக்குவர், பழிஎனின்
உலகுடன் பெறினும், கொள்ளலர் ; அயர்விலர் ;
அன்ன மாட்சி அனையர் ஆகித்
தமக்குஎன முயலா நோன்தாள்,
பிறர்க்குஎன முயலுநர் உண்மை யானே ’ (புறம் - 182)

என்னும் பாட்டில் ‘இந்திரர்க்குரிய அமிழ்தம் தமக்குக் கிடைத்தாலும் அதனை இனிதெனத் தாமே உண்ணுர். எவரிடத்தும் வெறுப்பும் கொள்ளார் ; அஞ்சத்தக்கவற்றிற்கு அஞ்சி, அதனைத் தீர்த்தற்கு மடிந்து மிரார் ; புகழ் என்ருல் தம் உயிரையும் கொடுப்பர். பழியெனில் உலகம் முழுதும் பெறினும் கொள்ளலர். சோம்பியும் இரார் ; அத்தகைய மாண்புடையராகித் தமக்கென வாழாது, பிறர்க்கென வாழ்பவர் இருத்தலால்தான் இந்தஉலகம் இயங்குகின்றது’ என்று கூறியுள்ளது இங்குப் பெரிதும் நோக்கற் குரியது ஆகும்.

உயரிய கருத்துக்களை ஒரு சில சொற்களில் அமைத்துக் கூறும் ஆற்றல்சால் வள்ளுவப் பெருந்தகையாரும்,

‘ பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்
மண்புக்கு மாய்வது மன் ’ (குறள் - 996)

எனக் கூறியுள்ளதையும் காண்க.

மேலும் புத்தர் பெருமான் தன் அரச வாழ்வைத் துறந்தும், ஏசுநாதர் தம் உயிரை ஈந்தும், உபிகாயகம் பெரிதும் அல்லலுற்றும் இவ்வுலக மக்களை உய்வித்துள்ளார்கள். பிற்காலத்தில் வாழ்ந்த நாயன்மார்கள், ஆழ்வார்கள் ஆகிய சமயப் பெரியார்களில் பலரும் மக்கள் நலனுக்காகத் தங்களை அர்ப்பணம் செய்துள்ளனர். இந்த இருபதாம் நூற்றாண்டிலும் கூடப் பிறர்க்கென வாழ்ந்து காட்டிய பெரியோர்கள் பலராவர். அவர்களுள் தலையாயவர் மகாத்மா காந்தியடிகளாவர். காந்தியடிகள் சாதி, சமய, நிற, இன வேறுபாடு கருதாது எல்லோரும் இன்புற்று வாழும் பொருட்டுத் தம் உடல், பொருள், உயிர் யாவற்றையும் ஈந்துள்ளார் என்பதை உலக மறியும்.

இத்தகைய பிறர்நலம் பேணும் பேருள்ளம் வாய்க்கப் பெறுவது எங்ஙனம்? அதற்கு வழி பிற உயிர்களிடத்தில் அன்பு செலுத்துவதே யாகும். அன்பு ஒன்றே இருபேர்களின் உள்ளத்தினைப் பிணைக்க வல்லதாகும். அஃது எல்லோரிடத்திலும் நட்பு எனும் பண்பையும் வளர்க்கிறது. அன்பு வளர வளரப் பண்புள்ளம் வலிமையுறுகிறது. அன்பு முதிர்ச்சியடையும் பொழுதுதான் அருளாக மிளிர்கிறது. அறிந்தார் மாட்டுச் செலுத்துகின்ற அன்பு பெருக்கமுற்று அறியாதார்மாட்டு அருளுடையவராகத் திகழ வழி வகுக்கிறது. அருளாட்சி ஒன்றே பொதுநலப் பண்பை வளர்க்க வல்லது. ஒருவன் பொதுநலம் புரிவதன்மூலமே நிலைத்த இன்பத்தை எய்துகிறான். அதனைத்தான் மக்களும் பாராட்டுவர்.

ஆதலால்தான் முக்காலப் போக்கையும் முழுதுணர்ந்த செந்நாப் போதார் தாம் வகுத்துள்ள வாழ்க்கை நூலாகிய தமிழ் மறையில்,

'அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்துஞ் சிறப்பு' (குறள்-75)

'நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டும் உலகு' ( ,, 994)

எனத் திருவாய் மலர்ந்தருளி யுள்ளார். எனவே இவ்வுலகில் வாழும் ஒவ்வொருவரும் வாழ்க்கைக்கு இன்றியமையாத இம் மெய்ப்பொருளை உணர்ந்து, கடைப்பிடித்து ஒழுகி உயர்நிலை யடைய வேண்டும் என்பதே வள்ளுவரின் எண்ணமாகும்.

## *சைவ சமயத் தெளிவு-இளைஞருக்கு

(தி. கி. நாராயணசாமி)

(மலர் 32; இதழ் 8; 283 ம் பக்கத் தொடர்ச்சி)

**3. கடவுள் வழிபாடு:** கடவுளுடைய திருவடிகளை அடையப் பிறவி எடுத்தோம். ஆதலால், அத்திருவடிகளைச் சிந்தித்தல், துதித்தல், வணங்குதல் தலைமைக் கடமையாகும். நல்வழிப்பட உடலுக்கு உணவும், மனத்திற்குக் கல்வியும் வேண்டும் அதுபோல உயிர் நலப்படக் கடவுள் வழிபாடு வேண்டும். உடலும் மனமும் உயிரின் கருவிகள். உடல் தொழில் செய்யவும், மனம் ஆராயவும் கருவிகள் ஆகும். கருவிகளைவிடக் கருவிகளை உடையவன் மேலானவன். ஆதலால், உடல், மனம் இவற்றைவிட உயிர் மேலானது ஆகவே உடலுக்கு வேண்டிய உணவினும், மனத்திற்கு வேண்டிய கல்வியினும் மேலானது உயிரை நல்வழிப் படுத்தும் கடவுள் வழிபாடு. அன்றியும் உடல், மனம் உயிருக்குக் கருவியாதலால், இவற்றினும் சிறந்த தொழில் உயிருக்கு வேண்டிய கடவுள் வழிபாட்டில் ஈடுபடுதலாம். திருக்கோயிலை வலம் வந்து, இறைவனுக்குப் பூச்சாத்தி, தோத்திரம் செய்யாத உடலினால் பயனில்லை என்பர் திருநாவுக்கரசர்.[1] கடவுளுடைய திருவடிகளைத் தொழத் துணையாய் நில்லாத கல்வியினால் பயனில்லை என்பர் திருவள்ளுவர்.[2]

காலை மாலை, கடவுள் வழிபாட்டிற்குரிய நேரங்கள். இவ் வழிபாடு பலவாறாகச் செய்யப்படுகிறது. சிலர் தேவாரம், திருவாசகம் முதலிய அருட்பாக்களைப் பாடிக் கடவுளைத் தோத்திரம்செய்து, அழுந்தி எண்ணிச் சிந்தித்து வணங்குவர். சிலர் இவற்றோடு ஐந்தெழுத்தை ஓதுவர்; திருப்புகழ் முதலிய அருட்பாக்களை அல்லது ஆறெழுத்தை ஓதுவர். வேறு சிலர் திருமேனிகளுள் ஒன்றுக்குப் பூசை செய்வர். சிலர் கோயிலுக்குச் சென்று இறைவனை வணங்கி வழிபடுவர்.

கடவுளை நாம் காணும்போதும் பூசிக்கும்போதும், எங்கும் நிறைந்துள்ள இறைவனே! சிறியேனுடைய வழிபாட்டிற்காக இங்கு எழுந்தருளியிருக்கும் இப்பெருங்

---

*சு. சிவபாத சுந்தரம் அவர்கள் எழுதிய சைவ சமய சாரத்தைத் தழுவியது.—தி.கி.நா. 1. ஆக்கையால். 2. கற்றதனால்.

கருணையை எவ்வாறு புகழ்வேன்! உன்னுடைய திருமுன் நின்று உன்னுடைய கருணையைப் பருகும் பேறு கிடைத்ததே! உன்னை மறந்து விடுகிறேனே![1, 2] என்று அந்த நேரம் மனத்திலே வருவனவற்றைச் சொல்லி மகிழ்வோம். கடவுள் வழிபாடு இந்த அளவோடு நில்லாமல் பிற செயல்களிலும் செறிந்திருக்கின்றது. விழித்தெழும் போதும், உடன் கை, வாய் கழுவிச் "சிவசிவ" என்று நீறு அணிகிறோம். குளிக்கும் போது கடவுளைச் சிந்திக்கிறோம். உண்ணும்போது கடவுளுக்குப் படைத்து உண்கிறோம். உணவு முடிந்தவுடன் "சிவ சிவ" என்று நீறு பூசுகிறோம். வெளியே செல்லும்போதும் அப்படியே செய்கிறோம். படுக்கப் போகும்போது சிவனைப் புகழ்ந்து திரு ஐந்தெழுத்தை ஓதிக்கொண்டு படுக்கிறோம்.

கடவுள் வழிபாடு ஒழுக்கத்தையும் சீர்படுத்தக் கூடியது. தீய ஆசைகள், தீய எண்ணங்கள் எழும்போது, சிவ சிந்தனை செய்தால், கருகி மீளாமல் அழிந்துவிடும்; மனத்தைத் தூயதாக்கி இறைவன் எழுந்தருளத் தகுதிவாய்ந்த இடமாக்கும். இவ்வுண்மையைத் திருநாவுக்கரசர் திருவாக்குகளிற்காண்க.[3, 4]

எதை மிகையாகச் சிந்திக்கிறோமோ அதனிடத்தில் உறுதியான பற்று உண்டாகின்றது. அறிவிலே அதிகமான கவலையுடைய மனம் கல்வியிலன்றி வேறொன்றிலும் செல்லாது. இசையை மிகச் சிந்திப்பவன் இசை மயமாகின்றான். கடவுளிடம் சிந்தனையைச் செலுத்துபவன் கடவுளின் அருள் மயமாகின்றான்.[5]

4. **இருவினைகள்:** கடவுள் எல்லா உயிர்களுக்கும் மேலான தந்தை. மற்ற உயிர்கள்யாவும் உடன் தோன்றல்கள். அன்பு, ஆதரவுக்கு உரிமை உடையவர்கள். இதை முற்றும் மறந்து சிலரை வெறுக்கின்றோம்; சிலரைப் பகைக்கின்றோம்; சில உயிர்களுக்குத் துன்பம் செய்கின்றோம்; சிலவற்றைக் கெடுக்கின்றோம். இப்படி முறைகேடாய் நடப்பதற்குக் காரணம் ஆசைகள். அவாவிற்குக் காரணம் நம்மை மயக்கும் ஆணவம்.

---

1. பனைக்கை. 2. புழுவாய்ப்.
3. தேடிக். 4. காடி. 5. நிலைபெறுமாறு.

ஆசைகளை எல்லைப்படுத்தினால் மற்ற உயிர்களை உடன் தோன்றியவர்களாகப் பாவித்தல் எளிதாய்க் கைகூடும். நமக்குப் பொருளில் ஆசை உண்டு. இந்த ஆசைக்கு எல்லை, நன்முயற்சியில் ஈட்டும் பொருளாம். அந்த எல்லையைக் கடந்து பிறர் பொருளிலே இந்த ஆசை செல்லுதல் தகாது. உணவிலே ஆசை உண்டு. இந்த ஆசைக்கு எல்லை பிற உயிர்களை வருத்தாமல் வரும் உணவுகளாம்.

ஆசை எல்லைகடந்துசெய்யும்செயல், தீவினையாகும். தீவினை செய்பவர்களுக்குக் கடவுள் எப்பிறவியிலேனும் துன்பமான வாழ்க்கையைக் கொடுப்பார். இப்பிறவியில் குருடர், செவிடர், நொண்டிகளாய்ப் பிறக்கிறவர்களும், பிறந்த பின்பு வறுமை, நோய், அறிவின்மை பிறவற்றால் வருந்துகிறவர்களும் முற்பிறவியிலே தீவினை செய்தவர்களாம். இவர்கள் வருந்துவதைக் காணும்போது, தீவினை செய்ய அஞ்சுகின்றோம்.

வலிய ஆசைகள் எல்லை கடக்கும்போது அவைகளை அடக்குதல் அரிது. ஆதலால், அவை எல்லை கடவா வகையில் நம்மைப் பழக்கவேண்டும். அப்பழக்கத்தைக் கைக்கொண்டால், மனம் தீய வழியிலேயே செல்லாது. இப்பழக்கத்தை இளமையில் மேற்கொள்ளுதல் எளிது. இளமையிலே உண்மை, நேர்மை, மன அடக்கம், மன உறுதி, மன நிறைவு ஆகியவற்றைப் பழக்கிக்கொண்டால், இறக்கும்வரை இவை நிலைத்திருக்கும். அறப்பற்றும், பிற உயிர் இரக்கமும், யாவரும் கடவுளின் குழந்தைகள் என்ற எண்ணமும் உறுதிப்பட்டால் ஆசைகள் இயற்கையாகவே அடங்கி நிற்கும். அப்படி அடங்கி நின்றால் தீவினைகளை நாம் செய்யமாட்டோம்.

நல்ல வரலாறுகளைப் படித்தல், கேட்டல், நயத்தல், தாய்தந்தை ஆசிரியர் முதலியோருக்குப் பணிந்து நடத்தல், அவர்களுடைய அன்பை விரும்புதல், முதலியன தீவினை செய்யாமைக்குத் துணையானவைகள். எங்கும் நிறைந்து, எல்லாம் அறிந்து,. நெஞ்சிலே எப்போதும் வீற்றிருக்கும் சிவனை வணங்கிப் பணிந்து நடத்தல் தீவினையினின்றும் நீங்குதற்குச் சிறந்த சாதனமாம்.

அறிஞர்கள் ஆசைகளை எளிமையாகக் களைந்துவிடுவார்கள். உடலும், மற்றப் பொருள்களும், இந்த உலகமும்

மாயையால் ஆக்கப்பட்டவை ; மாயையும் கைவிட்டால்தான் கடவுளுடைய திருவடிகளை அடையலாம் ; ஆதலால் மாயை விலக்கப்பட வேண்டிய பொருள். நாம் அவாவும் பொருள் கள் எல்லாம் மாயையிலிருந்து தோன்றியவை. ஆதலால் இப்பொருள்களிலே ஆசை கொள்ளுதல் தவறாகும். அன்றி யும், உயிரானது மாயையினும் பல மடங்கு மேலான பொருள். ஆதலால் அது மாயையாம் பொன், புலம், பூண், புலால், பேர், பெருமை பிறவற்றிற்கும் அடிமையாதலால், தகாது என்று கருதி அறிஞர்கள் அவாவினை அறுப்பார்கள்.

இனி நல்வினை எது எனில், நாம்கொண்ட கடவுள் அன்பினாலும், மற்ற உயிர்கள்பால் கொண்ட இரக்கத்தினா லும் உந்தப்பட்டுச்செய்யும் நற்செயல்களாம். அவை கடவுள் வழிபாடு, இன்சொல், வறியவர்களின் பசிநோய் தீர்த்தல், பிறர்செய்யும் பிழைகளைப் பொறுத்தல்,அறிவுரைகூறல் இவை அன்ன பிறவுமாம். நல்வினை செய்பவர்களைக் கடவுள் இப் பிறவியிலும், மறு பிறவியிலும் குறைவற வாழ வைப்பார். அதனால் அவர்களுக்கு நல்வினைப்பற்று மேலும்வளர்ந்து ஓங்கும்; மெய்யறிவு ஏறி ஆணவ மறைப்புக் குறைந்துவரும்.

தீவினை இழைப்பவர்களுக்குக் கடவுள் துன்பத்தை ஊட்டுவார். அத்துன்பத்தினால் அவர்களுக்குத் தீவினையில் வெறுப்பும் நல்வினையிலே விருப்பும் உண்டாகும். அதனால் ஆணவ மறைப்புக் குறையும் ; மெய்யறிவு வளரும்.[1]

**5. சைவ வாழ்க்கை :** நாம் விரும்பியபடி ஒன் றைப் பெற்றால் நம் மனத்தில் இன்பம் உண்டாகிறது. கள் விரும்புவோன் அதைப் பருகும்போது இன்புறுகின்றான். அன்றியும் விரும்பமாட்டாத ஒன்று நம்மைச் சேராவிட்டா லும் இன்புறுகின்றோம். களவு செய்தவன் அகப்படாமல் தப்பிவிட்டால் மிகவும் மகிழ்கிறான்.

இப்படியின்றி, விரும்பிய ஒன்று கிட்டா விட்டாலும், விரும்பாதது வந்து சேர்ந்தாலும் துன்பம் உண்டாகின்றது. நமக்காயினும், நம்மைச் சேர்ந்தவர்க்காயினும், நம்முடைய

1. கொல்லாமற்.

பொருளுக்காயினும் இடர் நேர்ந்தால் துக்கம் உண்டாகின்றது. யாராயினும் இடர்செய்தால் அவரிடத்திலே கோபம் உண்டாகிறது. ஏதாயினும் இடர் வரப்போகிறதென்று கண்டால் அச்சம் உண்டாகின்றது.

சைவ வாழ்க்கையில் துன்பம், துக்கம், வெகுளி, அச்சம் இவற்றிற்கு இடமில்லை. வண்ணக் கண்ணாடி அணிந்து எதைப் பார்த்தாலும் அது அதன் வண்ணமாகவே தோன்றும். வெண்பாலும், செம்மை இரத்தமும், நீல ஆகாயமும், கரிய காகமும் அணிந்த கண்ணாடி வண்ணமாகவே தோன்றும். அதுபோலச் சைவக் கண்ணாடி வழி கண்டால், யாவும் உவப்பானவைகளாகத் தோன்றும். விரும்பிய பொருள் கிடைக்காவிடில் துன்பமில்லை ; கப்பல் ஆழ்ந்து போனால் துக்கமில்லை ; என் குழந்தை இறந்துபோம் என்று அஞ்சுவதில்லை ; பயிரை அழிப்பவனைத் தடுத்தலும், கண்டித்தலுமே யன்றிக் காய்தல் இல்லை.

சைவசமயப்படி ஆணவ நோயால் நாம் பீடிக்கப்பட்டிருக்கிறோம். இந்த வியாதியைத் தீர்க்கும் வைத்தியர் சிவன் ; ஆதலால் அவர் "வைத்தியநாதன்" ஆவர். நோயாளி தனக்குப் பொருந்தா உணவுகளை விரும்புவான். ஆனால் வைத்தியன் அந்த உணவுகளைக் கொடுக்கமாட்டான். அதுபோல, ஆகாத பொருள்களை விரும்புதல் உண்டு. வைத்தியநாதக் கடவுள் அவற்றை அருளமாட்டார். ஆதலால் விரும்பிய பொருள் கிடையாவிடின், அது ஆகாததென்று உணர்ந்து, அது கிடையாமற் போனதைப்பற்றி மகிழவேண்டும். நோயாளி விரும்பாத பலவற்றை வைத்தியன் அவனுக்குச் செய்கிறான் ; கசப்பானவற்றை உண்ணச் செய்கிறான் ; கத்தியினாலே கீறி வேதனையைத் தருகிறான். அதுபோல, சிவன் விரும்பமாட்டாதவற்றைச் சேர்த்தலும், கொடிய வேதனைகளை ஆக்குதலும், ஆணவமாகிய நோயை நீக்கி நல்வழி வாழும்படி வைத்தற்கேயாம். ஆதலால் முயற்சிகளைக் கடந்து, வெறுப்பவைகள் நம்மை அடைந்தாலும், வேதனைகளில் அகப்பட்டாலும், அவைகள் நன்மைக்காகக் கடவுளால் அருளப்பட்டவை என்பதை உணர்ந்து, அவை

களைப் பற்றி இன்புறுதலே நன்று. கப்பல் ஆழ்ந்ததும், குழந்தை இறந்ததும் நன்மையானவைகளே. அவை எப்படி நன்மை என்பதை அறிய வேண்டியதில்லை. "யாவும் அவருடைய செயலே; அவர் செய்வதெல்லாம் நன்மையே" என்று நம்பிக்கையில் உறுதியிருந்தால் அப்பர் பாடியபடி,[1, 2] என்றும் எப்போதும் இன்பமாய் வாழலாம். துக்கம், வெகுளி, அச்சம், ஆகிய மூன்றும் உடலுக்கே தீமையானவை. கப்பல் ஆழ்ந்து போனால், பெருமுயற்சி செய்து பொருளைத் தேடி நட்டத்தைத் தீர்த்தலும், யாராவது இடர் செய்ய வரும்போது கோபம் கொள்ளுதலின்றி அவனைத் தடுத்தலும், குழந்தையானது கொடிய நோயின்வாய்ப் பட்டாலும், அஞ்சுதலின்றி நல்ல வைத்தியம் செய்தலும், அது இறந்துபோனால் பிறந்தவர் இறப்பது திண்ணம் என்று மனங் கலங்காதிருந்தலும் யாரும் செய்யத் தக்கவைகளாம்.

6. **சைவ ஒழுக்கங்கள்:** 1. சைவ ஒழுக்கங்களுள் இன்றியமையாதது திருநீறு அணிதல். அதை அணியும்போது சிவனை நினைத்தலும் திரு ஐந்தெழுத்தை உச்சரித்தலும் அவசியமானவை.[3]

2. திரு வைந்தெழுத்தை ஆறுதலாயும் அமைதியாகவும் அன்போடு நாளும் ஓதுதல்.[4]

3. திருமுறைகளை ஒவ்வொரு நாளும் ஓதுதல். திருமுறைகளை வீட்டில் வைத்துக்கொள்ளுதல்.

4. சிவத்திருமேனிகளுள் ஒன்றிலே சிறந்த பற்றுவைத்து நாள்தோறும் தியானித்துத் தோத்திரம் சொல்லி வணங்குதல்; சிவத்தியானத்துக்கு நடராசவடிவம் பொருத்தமானது.[5] அதிலுள்ள ஒவ்வொன்றும் அரிய உண்மைகளை விளக்கி, நல்வழியிற் செலுத்தத் தக்கது. திருக்கையில் உள்ள உடுக்கை படைத்தல் தொழிலைக் குறிக்கின்றது. கடவுள் நம்மைப் படைத்தது, மெய்ப்பொருளாகிய அவரை அடைந்து பேரின்பத்தைப் பெறுதற்காக என்பதை அது காட்டும்.[6] அவருடைய வேறொரு திருக்கை அபயக்கை. அது "நாம் உன்னைக் காப்போம்; ஒன்றுக்கும் பயப்படாதே" என்னும்

1. நாமார்க்கும். 2. சுண்ணவெண். 3. கருவாய். 4. காதலாகி. 5. தோற்றம். 6. உற்றாரை.

குறிப்புடையது.[1] திருவடிகளுள் ஒன்று முயலகனை மிதித்தல், ஆணவத்தை நசித்தலைக் குறிக்கும். அதைக் காணும் போது, அவருடைய திருவடித் துணையைக் கொண்டு ஆணவத்தாலுண்டாகும் ஆசைகளை அடக்கவேண்டும் என்னும் விருப்பம் உண்டாகும். மற்ற திருவடி, அவர் நம்மைத் தம்மோடு சேர்த்துத் தம்மைப்போல் ஆக்குவார் என்பதைக் குறிக்கும்.[2] 5. அடியார்களது திருநாட்களைக் கொண்டாடி அவர்களுடைய வரலாறுகளைச் சொல்லி அல்லது கேட்டு அவர்களை வழிபடல்.[3] 6. நாள்தோறும் அல்லது வாரந்தோறும் கோயிலுக்குப் போதல். 7. சைவசமய முறைப்படி எப்போதும் நடக்கமாட்டாதவர்கள் வாரத்திற்கொரு முறையேனும், பக்கத்திற்கொரு முறையேனும், திங்களுக்கொரு முறையேனும் முறைப்படி தவறாது நடத்தல். இப்படி நடத்தல் விரத நாட்களிற் பொருந்தும். மாசியில் வரும் சிவராத்திரி விரதம் சைவர் யாவரும் கொள்ளத் தக்கது. 8. நாம் காணும் யாரும் சிவனது திருவடிகளைச் சேருதற்கு யாத்திரை செய்பவர் என்ற எண்ணமே மனத்திலே முதலில் உண்டாதல். அவர் நம்மிடம் வந்த தொழில் தொடர்பு இரண்டாவதாக எண்ணுதல்.

**7. சைவத்தின் மேன்மை:** 1. சைவ சமயமே எல்லா உயிர்களும் வீட்டை அடையும் என்று சொல்லுகிறது.

உமாபதிசிவம் உயிர்களை வகுக்கும் போது (1) இதுவரையில் வீட்டைப் பெற்றவர்கள் (2) இனிமேல் வீட்டைப் பெறுவோர்கள் என இரண்டாகப் பிரிக்கின்றார். "துறந்தோர் துறப்போர்" என்பது அவருடைய வாக்கு. மற்றைய சமயத்தவர்கள் தங்கள் தங்கள் சமயத்தவர்களே ஈடேறுவார்கள் என்றும், வேறு சமயத்தவர்கள் மீளா நரகத்தை அடைவார்கள் என்றும் சொல்லுவர்.

2. ஒரு பள்ளியின் அமைப்பு மாணக்கர்களது அறிவுக்குத் தக்கதாக ஒன்றுக்கொன்று மேற்பட்ட பல வகுப்புகளை வைப்பதுபோல, கடவுள் உயிர்களது நிலைக்குத் தக்கதாக ஒன்றுக்கொன்று மேற்பட்ட பல சமயங்களை ஆக்கி

---

1. மண்பாதலம். 2. புகழ்மின். 3. தில்லைவாழ்.

ஞர் என்று சொல்லுவது சைவசமயமே. "அறுவகை நெறிகளும் பிறவுமாக்கிய இறைவி" என்றார் கச்சியப்பசிவம். "அறுவகை நெறி" என்றது அறுவகைச் சமயம்; இவை நான்கு வகைப்படும்.

கீழ்வகுப்பாகிய அறுவகைச் சமயங்கள் சமண சமயம் முதலியவை. இவற்றுட் பல, கடவுள் உண்டென்று சொல்லுவதில்லை. மேற்பட்ட அறுவகைச் சமயங்கள் ஏகான்மவாதம் முதலியவை. இவற்றுட் பல, உயிரின் வேறாகக் கடவுள் இல்லையென்று கூறும்.

இவற்றுக்கு மேற்பட்ட அறுவகைச் சமயங்கள் சாக்தம் முதலியவை. இவைகள் கூறும் கடவுளின் இலக்கணம் நிறைவான தன்று. இவற்றுக்கு மேற்பட்ட அறுவகைச் சமயங்கள் சிவசமவாதம் முதலியவை. இவற்றுக்கும் சைவத்திற்கும் வேறுபாடு மிகச்சிறிது. இவற்றுக்கு எல்லாம் மேற்பட்டது சைவ சமயமாம்.

3. மற்றைய சமயத்தவர்கள் தங்கள் தங்கள் சமயமே கடவுளால் ஆக்கப்பட்டதென்றும் ஏனைய சமயங்கள் கெட்ட சமயங்கள் என்றும் சொல்லுவார்கள்.

எந்தச் சமயத்தவரும் தமது சமயக் கடவுளை வழிபடும் போது, அவ்வழிபாட்டைக் கடவுள் ஏற்று அருள் செய்வாரென்று சொல்லுவது சைவசமயமே.

"யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே
மாதொரு பாகனுர்தாம் வருவர்"

என்றார் அருள் நந்தி சிவம்.

4. வீடு அடைதற்குச் சாதனமாகச் சமயஅனுட்டானத்தைப் படிப்படியாக நிரைப்படுத்தியுள்ளதும் சைவசமயமே.

சர்வகலாசாலைகளிலே இளம்பட்ட வகுப்புகள், முதுபட்ட வகுப்புகள் என இரண்டு பெரிய படிகள் இருப்பது போலச் சைவ சமயத்தில் உபாயவழி, உண்மைவழி என இரண்டு பெரும் படிகள் உண்டு.

உபாயவழி உலகப்பற்றோடு செய்யும் சைவ ஒழுக்கங்கள். நம்மைப் போன்றவர்கள் சைவசமய ஒழுக்கங்களைச் செய்வாராயின் அவர்கள் உபாய வழியினர் ஆவர். உண்மை வழி, உலகப்பற்றுச் சிறிதுமின்றிச் செய்யப்படும் சைவ

ஒழுக்கங்கள். தாயுமானவர் முதலியோர் உண்மை வழியினர். இளம்பட்ட வகுப்புகள் முதலாண்டு வகுப்பு முதல் நான்காமாண்டு வகுப்புவரையும் நாலு படிகளாதல் போல, உபாயவழி : உபாயச்சரியை, கிரியை, யோகம், ஞானமென நான்கு படிகளை உடையது. முதுபட்டப் படிப்பிலே பல படிகள் இருத்தல் போல உண்மை வழியிலே உண்மைச் சரியை, கிரியை, யோகம்என மூன்று படிகள் உள. முதுபட்டப் படிப்பில் உயர்ந்த நிலை அடைந்தோர் இராச சபை அங்கத்தவராதல் போல உண்மை வழியில் உயர்ந்த நிலை அடைந்தோர் உண்மை ஞானமாகிய உயர்ந்த படியை அடைவர்.

இவற்றுள் சரியை:—சிவாலயத்தொண்டு செய்தலும், உருவத் திருமேனிகளுள் ஒன்றுக்குப் பூசை செய்தலுமாம். கிரியை :—சிவலிங்க பூசை செய்தல். யோகம் :—சிவத்தியானம். ஞானம் :—ஞான நூல்களை ஞானசாரியரிடம் கேட்டு அறிந்து சிவஞானத்தைப் பெறுதல்.

......" சங்கரனை அடையும்
நன்மார்க்கம் நாலு அவைதாம் ஞானயோகநற்
கிரியா சரியை என நவிற்றுவதுஞ் செய்வர் "

என்றார் அருள் நந்தி சிவம்.

5. எல்லாவிதமான தீவினைகளையும் விலக்குவது சைவ சமயமே. ஏனைய தீவினைகளோடு கள்ளுண்ணல், புலால் உண்ணல், கொலையாகிய மூன்றையும் விலக்குவது சைவ சமயமே.

புலால் உண்ணல், புத்த சமயத்தில் விலக்கன்று. புலால் உண்ணல், கொலை இவற்றை இஸ்லாம் விலக்கவில்லை. புலால் உண்ணல், கள்ளுண்ணல், கொலையையேனும் கிறிஸ்து சமயம் விலக்கவில்லை.

6. உயிர்கள் ஆணவமென்னும் வியாதியினால் பீடிக்கப்பட்ட நோயாளிகள் என்றும், அவைகள் செய்யும் பிழைகள் யாவும் அந்த நோயினுல் வருவன என்றும், அவைகள் இயல்பாக நல்லவை என்றும், கடவுள் அந்த நோயைத் தீர்க்கும் வைத்தியநாதர் என்றும், அவர் உயிர்களுக்கு ஊட்டும் இன்ப துன்பங்கள் அந்நோயைத் தீர்க்கும் மருந்துகள் என்றும் சொல்வது சைவ சமயம் ஒன்றே.[1]

---

1. அருளினால்.

மற்ற சமயங்கள் மனிதர்கள் இயல்பாகக் கெட்டவர்கள் என்றும், கடவுள் அவர்கள் செய்யும் குற்றத்துக்காக அவர்களைத் தண்டிக்கும் நீதிபதி என்றும் கூறும்.

7. புறச் சமயத்தவரை வலிந்து இழுக்காதது சைவ சமயமே. மற்ற சமத்தவர்கள் ஏனைய சமயத்தவர்களைத் தங்கள் சமயத்துக்கு இழுப்பதே தம் பெரிய முயற்சியாகக் கொள்வார்கள்.

---

# ஞான ரச வாதம்

வைத்திய ரத்நம் - பு. வே. தேவராஜ முதலியார்

ரசவாதம் என்பது ரசத்தைக்கொண்டு பல உலோகங்களையும் பொன்னாக மாற்றும் ஒரு விஞ்ஞானத் தொழில். சலித்தும், சஞ்சலித்தும் பல அணுக்களாகச் சிதறியும் நெருப்பிற்கு நிற்காமலும் புகைந்து ஓடக்கூடிய விசித்திரமான வெள்ளியைப்போன்ற நிறமுடைய அதிக ஊட்டமுள்ள பொருள் ரசம் எனப்படுவது. இதனை வைத்திய நூலார் சிவம் என்றும், கந்தகத்தைச் சக்தி யென்றும் கூறுவர். இதனையே விந்துநாதமென்றும், உப்பு, புளி என்றும் வகுத்துக் கூறினர். இதன் சேர்க்கையால் எல்லாம் உண்டாகுமென்று முடிவு கட்டியுள்ளனர். ரசத்தின் சுழன்று உழலும் தன்மையை நிறுத்தி, கட்டுப்படுத்தி அதற்குப் பல பொருள்களின் சத்துக்களையும் ஊட்டிக் குளிகை செய்வது சித்தர்களுடைய மரபு. இத்தகைய ரசகுளிகை தொன்றுதொட்டு நம் நாட்டில் அற்புதச் செயல்களைச் சில பெரியோர்கள் மூலம் விளக்கி வந்திருக்கிறது. (ஆகாய கமனம்)—உயரப் பறத்தல், உலோகங்களைத் தங்கமாக்கும் ஏமவித்தை, தன்னுடைய ஆன்மப் பிரகாசத்தை விளங்க வைக்கும் சொரூப சித்தி முதலிய பலவிஷயங்களை நல்கக்கூடியது இந்த ரசக் குளிகை. இதன் விவரங்கள் விரிக்கிற் பெருகும். திருமூலர், யோகர், கொங்கணர், சட்டமுனி இவர்களின் நூலில் விரிவாகக் காணலாம்.

தாயுமானவர் சித்தர் நூல்களிலே ஈடுபட்டுச் சித்தர் சம்பிரதாயங்களை நன்குணர்ந்து 'சித்தர் கணம்' என்னும் தோத்திரமும் தமது பாடலில் அருளியுள்ளார்கள். இந்த ரசத்தைச் சுழலும் தன்மையை நீக்கிக் கட்டுப்படுத்திச் சித்தி

முத்திகளை எய்துதற்குக் காரணமாகிய ஒருமூலமிருக்கிறது. அதைக் கண்டு அனுபவித்தால் இவற்றை எய்தலாம். அந்த மூலம் கல்லாலமரத்தின் அடியிலுள்ளது என்று நயம்பட உவமித்து ஒரு பாடல் அருளியுள்ளார்கள்.

ஆரணம் ஆகமம் எல்லாம் உரைத்த அருள்மவுன
காரண மூலம்கல் லாலடிக் கேயுண்டு காணப்பெற்றால்
பாரணங் கோடு சுழல்நெஞ்ச மாகிய பாதரசம்
மாரண மாய்விடும் எண்சித்தி முத்தியும் வாய்த்திடுமே.—தாயுமானர்

அநாதியே உயிர் பாசத்தினாலே மறைக்கப்பட்டிருப்பதைச் செம்பிற் களிம்பு போல உவமித்திருக்கிறார்கள். இந்தக் களிம்பை நீக்கச் செம்பைக் குகையிலிட்டு உருக்கி அதைக் கண் விட்டாடும்போது ரச குளிகையை ஸ்பரிசிக்க அது பொன்னாக மாறும். இதனைத் தாயுமான சுவாமிகள்,

கருமருவு குகையனைய காயத்தின் நடுவுள்
களிம்பு தோய் செம்பனைய யான்
காண்டக இருக்கநீ ஞானஅனல் மூட்டியே
கனிவு பெற உள்ளுருக்கிப்
பருவமறிந் துநின் னருளான குளிகைகொடு
பரிசித்து வேது செய்து
பத்துமாற் றுத்தங்க மாக்கியே பணிகொண்ட
பக்ஷத்தை என் சொல்லுகேன்
அருமைபெறு புகழ்பெற்ற வேதாந்த சித்தாந்தம்
ஆதியாம் அந்தமீதும்
அத்துவித நிலையாய் என்னையாண் டுன்னடிமை
யானவர்க ளறிவினூடுங்
திருமருவு கல்லா லடிக்கீழும் வளர்கின்ற
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

என்று திருவாய் மலர்ந்தருளியுள்ளார்.

இந்த ரசம் இந்த உயர்ந்தநிலை பெற்ற பொழுது குருவெனச் சொல்லப்படுகிறது. “குரு பரிசித்த குவலயமெல்லாம் திரிமலந் தீர்ந்து சிவனவனாமே” என்பது திருமந்திரம்.

எளிய வாது செய்வார் எங்களீசனை
ஒளியை உருகி உன்னும் மனத்தாய்

தெளிய ஓதிச் சிவாயநம என்னக்
குளிகை யிட்ட பொன்னுக்குவன் கூட்டையே.
செம்புபொன் னாகுஞ் சிவாய நமவென்னிற்
செம்புபொன் னாகத் திரண்டது சிற்பாஞ்
செம்புபொன் னாகும் ஸ்ரீயுங் கிரீயுமெனச்
செம்புபொன் னான திருவம் பலமே. —திருமந்திரம்-903

பின்னும்,

கறுத்த இரும்பே கனகம தானான்
மறித்திரும் பாகா வகையது போலக்
குறித்தஅப் போதே திருவருள் பெற்றால்,
மறித்துப் பிறவியில் வந்தணு கானே. திருமந்திரம் —2054
பரிசன வேதி பரிசித்த தெல்லாம்
வரிசை தரும்பொன் வகையாகு மாபோற்
றிருபரி சித்த குவலயம் எல்லாந்
திரிமலந் தீர்ந்து சிவகதி யாமே. ,, —2054
செம்பிரத குளிகையினாற் களிம்பற்றுப் பொன்னாய்ச்
செம்பொனுடன் சேருமலஞ் சிதைந்தாற் சீவன்
நம்பனுடன் கூடுமெனிற் பொன்போ லல்லன்
நற்குளிகை போலவர னணுகுமலம் போக்கி
யம்பொனடிக் கீழ்வைப்ப னருங்களங்க மறுக்கும்
அக்குளிகை தானும்பொன் னாகாதாகும்
உம்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரிய
னுயிர்தானுஞ் சிவாநுபவ மொன்றினுக்கு முரித்தே.
—சிவஞானசித்தியார்

அழலடைந்தபி னிருண்மல வலிதிரிந் தான்றாள்
நிழல டைந்தவர் காட்சிபோ னீப்பருங் களங்கங்
கழல வாடக மானதா லதுகொண்டு கனிந்த
மழலை யீர்ஞ்சொலாள் கண்டனள் வடிவிலான் வடிவம்.
—திருவிளையாடற் புராணம்

இதுகாறும் கூறிப் போந்தவற்றால் உயிர்மலமற்றுக் களிம்பற்று ஞான அக்கினியால் வினைகளற்றுச் சர்வ வல்லமையுள்ள குரு சம்பந்தத்தால் ஜீவத் தன்மை கெட்டு சிவமயமாய் விளங்கும் ஒரு அனுபவத்தை ரசவாத மூலமாகப் பெரியோர் கூறியுள்ளதை 'ஞானரச வாதம்' என்ற தலைப்பில் துவக்கப்பட்டது.

மாதாந்தர வழிபாடு : சென்னைத் தருமபுர ஆதீனப் பிரசார நிலையத்தின் சார்பில் 20-9-59 அன்று திருப்பாசூர் என்னும் பாடல்பெற்ற சிவதலத்தில் நடைபெறும். இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபை, இராயபுரம் இறைபணி மன்றம், சைவ சித்தாந்த மகா சமாஜம் முதலிய சமய அமைப்புக்கள் கலந்துகொள்கின்றன. அன்பர்கள் அனைவரும் இவ் வழிபாட்டு நிகழ்ச்சியில் ஈடுபடலாம்.

சமாஜம் நடத்தும் சைவப்புலவர் - இளஞ்சைவப் புலவர் தேர்வுகள் : இவற்றிற்குப் பாடதிட்டங்கள் "சித்தாந்தம்" (32) 3-ம் இதழில் வெளியிடப்பட்டுள்ளன. அதற்குரிய புத்தகங்கள் "சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1" என்ற விலாசத்திற்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம். சமாஜத்தில் அவைகளில்லை. தேர்வுக் கட்டணம் அனுப்புவோர் (30-9-1959)க்குள் அனுப்பிவிடவேண்டும். தேர்வு நடைபெறும் தேதி நவம்பர்மீ மூன்றும் ஞாயிற்றுக்கிழமை 15-11-1959. முடிபு வெளியிடல் 10-12-1959. சைவப் புலவர் தேர்வுக்கட்டணம் ரூ. 4. இளஞ்சைவப்புலவர் தேர்வுக்கட்டணம் ரூ. 3.

வாலாஜாபாத் இந்துமத பாடசாலை : அசாம் மாகாணத்தின் கல்வி அமைச்சரும் அம்மாகாணத்தின் ஆதாரக் கல்வித் தலைவரும், செங்கற்பட்டு மாவட்டக் கல்வித் துறைத் தலைவருடன், 21-8-59 காலை வாலாஜாபாத் இந்துமத பாடசாலையையும் அதன் சார்பிலுள்ள மாணவர் இல்லத்தையும், தொழிற்சாலையையும் பார்வையிட்டனர்.

திருவருள் தவநெறி மன்ற ஆண்டு விழா : அச்சிறுபாக்கத்தை அடுத்த கயப்பாக்கம் கிராமத்தில் மதுரையாதீனம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் தலைமையில் 9, 10-8-59 இருநாட்கள் நடைபெற்றது. திரு. G. கலியாணம்பிள்ளை M. A., திரு. புலவர் முருகவேள் ஆகிய இருவரும் சொற்பொழிவாற்றினர். திருவாளர்கள் - முத்துலிங்கா ரெட்டியார், சுப்பா ரெட்டியார், புருடோத்தம ரெட்டியார் முதலிய பெருமக்கள் பலர் விழா நன்கினிது நடைபெறப் பெரிதும் முன்னின்று உதவிகள் புரிந்தனர்.

விநாயக சதுர்த்தி விழா : சென்னை தியாகராயநகர்த் தருமபுர ஆதீனப் பிரசார நிலையத்தின் சார்பில் 6-9-59 அன்று சிறப்புறக் கொண்டாடப் பெற்றது. சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் தலைமை தாங்கிச் சிறப்பித்தார்கள். திரு. புலவர்-முருகவேள் "விநாயக தத்துவம்" என்னும் பொருள்பற்றிச் சொற்பொழிவாற்றினார். சங்கீத பூஷணம் திரு. P. சுவாமிநாதன் அவர்கள் திருமுறை இசை மிழற்றிச் சிறப்பித்தார்.



Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street. Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi, Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.